[18th February 1959

SRI P. G. MANICKAM : சார், இந்தக் கிராமச் சாவடிகளைப் பழுது பார்க்கக்கூடிய நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா?

THE HON. SRI V. RAMAIAH : பழுது பார்க்கப்படவேண்டிய சாவடிகள் அப்பேரதைக்கப்போது கவனிக்கப்பட்டு வருகின்றன.

*All-India tour by farmers*

* 441 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Chief Minister be pleased to state the places visited by the farmers of the State during the recent All-India tour?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement [a] showing the list of places visited by the farmers of this State during their recent All-India Tour is placed on the Table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : குடியானவர்கள் எத்தனை பேர்கள் சுற்றுப்பிரயாணம் செய்தார்கள். இவர்கள் எப்படி நம் மாகாணத்தில் பொருக்கி எடுக்கப்பட்டார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : A number of 324 Kisans took part in the tour and it lasted for 50 days. They had to make the tour at their own expenses and I think they made applications and on that basis they were selected.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தச் சுற்றுப்பிரயாணம் செய்த குழுவில் அரிஜன விவசாயிகள் எத்தனைபேர் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have that information with me, Sir.

SRI A. GOVINDASAMY : இந்தச் சுற்றுப் பிரயாணம் செய்த விவசாயிகளுக்கு அரசாங்கம் என்னென்ன உதவிகள் செய்திருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : செலவை அவர்களே போட்டுக் கொண்டார்கள். போக வேண்டிய ரயில் ஏற்பாடு செய்வது, போன இடங்களில் தக்க ஏற்பாடு செய்வது, ஆங்காங்கு பார்ப்பதற்கு வசதிகள் செய்து கொடுப்பது ஆகியவைகளை அரசாங்கம் செய்து கொடுத்தது.

SRI K. B. S. MANI : இந்த விவசாயிகள் பட்டியலிலே சுற்றுப் பிரயாணம் செய்தவர்கள் நிலம் வைத்திருக்கக்கூடிய பெரிய நிலக்காரர்களா ? அல்லது வயலில் வேலை செய்கின்ற ஏழை விவசாயிகளா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லாப் பகுதிகளையும் சேர்ந்தவர்கள் இருந்தார்கள் என்று நினைக்கிறேன்.

*Reserve Police Force for the Southern Zone*

*442 *Q*.—SRI A. VEDARATHNAM and SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தென் மண்டல ராஜ்யங்களுக்குப் பொதுவான ரிஸெர்வ் போலிஸ் படை அமைக்கும் தீர்மானம் எப்போது அமுலுக்கு வரும் ?

[a] Printed as Appendix on page 266 infra.

18th February 1959]

(ஆ) இந்த அமைப்பின் மூலம் நிர்வாகத் துறையில் என்ன அனுகூலங்களை அரசாங்கம் எதிர்பார்க்கிறது ?

(இ) பொருளாதார அனுகூலங்கள் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) to (c) The matter is still in the stage of consideration and as such, no details can be furnished.

*443 Q.—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether there is any scheme for the creation of a common Police Reserve Force in the State and in the Southern Zone of the country; and

(b) what the full details of the scheme are?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes, Sir.

(b) The matter is still in the stage of consideration and as such, no details can be furnished.

SRI A. A. RASHEED : Sir, is it a fact that the Kerala Government have declined to join the Common Police Force?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes; that is the position now, Sir.

SRI A. GOVINDASAMY : இப்பொழுது தமிழ் நாட்டிலே மலையாள போலீஸ் இருப்பதைப் போல மலையாளத்தில் தமிழ் போலீஸ் இருந்ததா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கேரள நாட்டில் என்ன போலீஸ் இருக்கிறது என்கிற தகவல் இந்த அரசாங்கத்திடம் இல்லை.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தத் தென் மண்டல ரிசர்வ் போலீஸை என்னென்ன காரியங்களுக்கு உபயோகப்படுத்துவதாக சர்க்கார் உத்தேசம்? இதில் பெண்களுடைய போலிஸ் படை உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தென் மண்டல போலீஸ் படை அமைக்கப்பட்ட பிறகு கனம் அங்கத்தினர் அவர்கள் கேள்வி கேட்டால் விவரம் சொல்லுகிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : கேரள ராஜ்ய போலீஸ் (மலபார் போலீஸ்) கேரளாவில் சேர விரும்பாததற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கேரள அரசாங்கத்தார் கேட்கவேண்டும். நாங்கள் கூறுவது சரியல்ல ?

*Teaching of English*

*441 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இம்மாநில ஆரம்பப் பள்ளிகளில் 5-ம் வகுப்பிலிருந்து ஆங்கிலம் கட்டாய பாடமாகப் போதிக்கும் திட்டம் உண்டா ?

(ஆ) எப்போதிலிருந்து இந்த திட்டம் அமுலுக்கு வரும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(b) From the academic year 1960–61.